Reg. No. M. 2997.

161

தனிப்பிரதி 1 அணா

REPUBLIQUE FRANÇAISE

Liberté - Egalité - Fraternité

ஆசிரியர்:
யாழ்ப்பாணம்
தென்கோவை.
ச. கந்தையபிள்ளை
தமிழ்ப் பண்டிதர்,
சிலோன்.

LE REDACTEUR
TENKOVAI
S. CANDIAH PILLAI
TAMIL PANDIT
JAFFNA
CEYLON.

# VITTAGAM

JOURNAL HEBDOMADAIRE PARAISSANT LE JEUDI

# வித்தகம்

வியாழக்கிழமைதோறும் வெளிவருவது

Bureau de la Direction:—
RUE D'AMBALATADOUAYER
MADAM NO. 4, Pondichery.

நத்தம்போற் கேடு முளதாகுஞ் சாக்காடும்
வித்தகர்க் கல்லா லரிது. குறள்.

காரியாலயம்:—
அம்பலத்தாடு ஐயர் மடத்து
வீதி நெ. 4, புதுவை

VOL I. புதுவை, பவ ௵ சித்திரை ௴ ௭ ௨ (19—4—34) No. 21.

## ஔவை குறள்

### முத்திகாண்டல்

மனத்தோ டுறுபுத்தி யாங்காரஞ் சித்தம்
அனைத்தினு மில்லை யது. (1)

வாக்குங் கருத்து மயங்குஞ் சமயங்கள்
ஆக்கிய நூலினு மில். (2)

உருவமொன் றில்லை யுணர்வில்லை யோதும்
அருவமுந் தானதுவே யாம். (3)

தனக்கோ ருருவில்லை தானெங்கு மாகி
மனத்த கமாய் நிற்கு மது. (4)

பெண்ணா ணலியென்னும் பேரொன் றிலதாகி
விண்ணாகி நிற்கும் வியப்பு. (5)

அனைத்துருவ மாய வறிவை யகலில்
தினைத்துணையு மில்லை சிவம். (6)

துனிமுகத்துக் காதியாத் துன்னறி வின்றி
அணிதா ரிரண்டு விரல். (7)

மயிர்முனையிற் பாதி மனத்தறி வுண்டேல்
அயிர்ப்புண்டங் காதி நிலை. (8)

தற்பர மான சதாசிவத்தோ டொன்றில்
உற்றறி வில்லை யுயிர்க்கு. (9)

உறக்க முணர்வு பசிகேடப் பட்டால்
பிறக்கவும் வேண்டா பிறப்பு. (10)

# உடலுயிர்ச் சம்பந்தம்

உடலுயிர்ச் சம்பந்தம் என்பது உடலுக்கும் உயிருக்கும் உளதாகிய நட்பு எனப்பொருள்படும். உடலினிடத்து உயிருக்கும் உயிரினிடத்து உடலுக்கும் உள்ளதாகிய நட்பு—தொடர்பு இன்னது என விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும். இந் நட்பு கடை நட்பு இடை நட்பு தலை நட்பு என மூன்றுவகைப்படும்.

## 1-வது கடை நட்பு

அஃதாவது உடலுக்கும் உயிருக்கும் சிலகாலத்துக்கு மட்டும் உரிய சிறிய தொடர்பாகும். அழியுந் தன்மையுடையதாகிய அசுத்த பௌதிக தனுவோடுகூடிய உயிர், சில காலம் வினைப்பயனாகிய இன்ப துன்பங்களை நுகர்ந்து அவைகாரணமாகஅவச்சலனமடைந்து வாதம் முதலிய பிணிகட்கு இல்லாய உடம்பினுள் ஒருவாற்றான் ஒதுங்கியிருத்தலாகிய கடைநட்புடையதாய், அவ்வுடல் நரை திரை மூப்புப்பிணிகளால் பழுதடைந்து சத்துக்கெட்டு பிணமாகி விழ அதனைப் பிரிந்துவிடுகின்றது. உலகில் தோற்றமுடையனயாவும நிலையுதலில வாந் தன்மையுடையன என்பது அஃதாவது அழியுந்தன்மை யுடையன என்பது யாவரும் கண்கூடாக அறிந்த விஷயமாகும். தற்காலச்சமய சாத்திரங்களெல்லாம் இதற்குப் பிரமாணமாகின்றன. இந்நூல்களெல்லாம் இந் நிலையாமையை மிக விரிவாகவும் சிறப்பாகவும் கூறுகின்றன. பொய்யில் புலவரும்பின்வரும்திருவாக்குக்களால் இந்நிலையாமையை நன்கு விளக்கிப் போந்தனர்.

### குறள்

நில்லா தவற்றை நிலையின வென்றுணரும்
புல்லறி வாண்மை கடை.

(ஷை நிலையாமை. 1.)

(இ-ள்.) நில்லாதவற்றை—தோன்றி யழியும் தன்மையுடையனவாகிய அஃதாவது அநித்தமான மாயா காரியப் பொருள்களை, நிலையின என்று உணரும்—அழியாத நித்தியப் பொருள்கள் என்று கருதும், புல் அறிவு ஆண்மை — அற்ப அறிவினை உடையராதல், கடை—மாயாபோகங்களில் கடும் பற்றுள்ள முடையராய் உழலும் பாமரர்க்குரிய இழிந்த தன்மையாகும் என்பது.

திருக்குறள் உரையாசிரியர்களும் "மயங்கிய வழிப் பேய்த்தேரிற் புனல் போலத் தோன்றி மெய்யுணர்ந்த வழிக் கயிற்றில் அரவுபோலக் கெடுதலிற் பொய்யென்பாரும்" என்பது முதலாக இந் நிலையாமையைக் குறித்துக் கூறியன பொருத்த முடையனவே.

கூத்தாட் டவைக்குழாத் தற்றே பெருஞ் [செல்வம்
போக்கு மதுவிளிந் தற்று.

(ஷை ஷை 2)

(இ-ள்) பெரும்செல்வம் கூத்தாட்டு அவை குழாத்து அற்று—ஒருவனுக்கு மாயாகாரியப் பொருளாகிய பெரிய செல்வம்வந்து பெருகுவது கூத்தாடும் அரங்கின்கண்ணே அதனைக்காண்போர் கூட்டம் ஒருங்குவந்து கூடுவதுபோலும், போக்கும் அது விளிந்தற்று—அச் செல்வம் விரைவில் அழிவதும் அக் கூத்தாட்டு முடிவின்கண் அக்காண்போர் கூட்டம் விரைவில் நீங்குவதுபோலும்.

ஒருவனுக்குப் பெருஞ்செல்வம் உளதாதற் கேற்ற நல்லூழ் வருங்காலம் அச்செல்வம் விரைவில் ஆக்கமுறுதலும், அந்நல்லூழ் ஒழிந்து தீய ஊழ் வருங்காலம் அது விரைவில் அழிதலும் உளவாகும் என்று மாயா காரியப் பொருள்களின் நிலையாமை கூறியபடியாம்.

நெருந லுளனொருவ னின்றில்லை யென் [னும்
பெருமை யுடைத்திவ் வுலகு.

(ஷை, ஷை, 5).

(இ-ள்) நெருநல்உளன் ஒருவன்—நேற்று இருந்தான் ஒருவன், இன்று இல்லை என்னும்—இன்று இல்லையாயினான் அஃதாவது இறந்து விட்டான் என்று கூறப்படும் நிலையாமையின் மிகுதிப் பாட்டினையே உடையதாயிருக்கின்றது இவ் உலகம் என்பது.

உலகத்தில் ஒன்றும் சதமல்ல எனவும், எல்லாம் வெளிமயக்கு எனவும், தோன்றி மறைதலையே இயற்கையாகவுடையது இத்தால உலகம் எனவும் பிறவுமாக இந்நிலையாமையை மிகச் சிறப்பாகவும் தெளிவாகவும் பலப்பல உவமானங்களால் அகில பாமரரும் நன்குணருமாறு வித்துவப் பெரியாரும் தத்துவப் பெரியாரும் நன்கு விளக்கிக் கூறியிருக்கின்றனர். அவர் வாக்குக்களை இங்கே காட்டுவதுமிகை. வித்துவப்பெரியார் பலர் உயிர் எனப்படுவது இந்த உடலின் வேறு எனவும், எக்காலத்தும் சரீரம் அழிந்துவிடுதல் திண்ணம் எனவும், ஆதலால் அதனைப் பொருட்பண்ணக் கூடாது—அதில் அழுத்தம் வைக்கக்கூடாது எனவும், காயம் பிணி மூப்புக்களால் பிணமாகிக் கழிந்தபின் அதனைப்பிரிந்த உயிர் இறைவன் திருவடியை அடைந்து அவ் இறைவனோடு இரண்டறக் கலந்து விடுதல் திண்ணம் எனவும், ஆதலால் யாவரும் மாயாகாரியங்களை வெறுத்துத்தள்ளிவிடுங்கள், கடவுளைப் போற்றுங்கள், புண்ணியங்களைப் புரியுங்கள், ஒழுக்கமுடையரா யிருங்கள் என்பன முதலிய பலவற்றையும் தமது நூல்களில் மிக வற்புறுத்தி கூறிவிட்ட

னர். இவை, மாயாகாரியங்களையே மெய் என நம்பி அவற்றில் கடும்பற்றுள்ளமுடையராய் உண்மையை நாடும் ஆற்றலும் காதலும் இல்லாது உழலும் பாமரர்க்கு இன்றியமையாத உபதேசம் என்பது நன்கு பெறப்படுகின்றது.

2-வது. இடை நட்பு.

அஃதாவது பல கோடி சென்ம நற்றவப் பயனாக முன்னிலையில் போந்த சற்குருநாதன் அருளால் பெற்ற உண்மைச் சாதக யோகங்களை வழுவற அநுட்டித்து மாயையின் முதற்படியாகிய அமலப்படியை மிதித்து இருவினை ஒப்பு மலபரிபாகம் வரப்பெற்ற பிரளயாகலர் என்னும் பக்குவிகளுக்குரிய உடல் உயிர்களின் தொடர்பு ஆகும். எவ்வாற்றானும் இறந்து பிறவி வலைப்படுதற்குரிய கடைநட்பாளராகிய சகலர்க்கும் இவர்க்கும் இடையீடு அளவிடற்கரிதாம் என்க.

நித்தமும் அநித்தமும் அஃதாவது சுத்தமும் அசுத்தமும் கலந்து பஞ்சீகரணிக்கப்பட்டது இந்த யாக்கை. பின்வரும் பிரமாணமும் இவ்வுண்மையைநன்கு புலப்படுத்தும்.

பதார்த்த தீபிகை

உருவமுன்னான்கும்புவியினிற்பாகத்து
(திப்பனவாய்
மருவுமநித்தம்பிறவற்றினித்தமுமாறுத
[லும்
விரவுமப்பாகவிதிதமக்கின்றிவிளங்கு
நித்தப்
பொருளிடைநித்தமநித்தத்தநித்தம்
பொருந்திடுமே.
(ஷை நித்தாநித்தவிவரணம்)

இவ்வாறு நித்தமும் அநித்தமும் கலந்து பஞ்சீகரணிக்கப்பட்டிருத்தலால் மேற்கூறிய இரண்டு நிறையும் ஒன்றுக்கு மற்றொன்று பேதித்திருக்கும். இதனால் சாதலைத் தவிர்க்க முடியாது என்னும் உணர்ச்சி உண்டாய விடத்து சிலேத்தும ஆதிக்கத்தால் விக்குள் எழுமுன், ஐந்துபுலனும் ஐந்து பொறியும்கலங்கி ஐம்புலத்தாறு—ஐம்புல நெறிமயங்கி ஐந்துக்குமேல் ஆறுவது எனக்கூறப்படும் அறிவழிந்து பல துன்பங்கட்கும் ஆளாகுமுன், வினையை மாற்றும் நெறியைக் கடைப்பிடித்துஒழுகி, நித்தமும் அநித்தமும் என்று கூறப்படும் சுத்தமும் அசுத்தமுமாகிய உடலுயிர் என்னும் இருவினையைச் சமரசப்படுத்தல் வேண்டும். இதனால் அழியாச் செல்வமும், அழியாப் போகமும், வாய்மையான அட்டமாசித்திகளும், அவற்றின் விரிவுகளான அறுபத்து நான்கு சித்துக்களும் தன் சரீரம் தனக்கு எவ்வண்ணம் இயையவேண்டும் என நினைப்பினும் அவ்வண்ணம் இயையப் பெறுவதும், அகிலசீவர்க்கும் மேலான சித்தனாய் வதியும் தத்துவமும், கடவுளுக்கு அணுக்கனாய் வதியும் பெரும்பேறும் ஒருவனுக்குஉளவாகும் என்க. இப்பெற்றிவாய்ந்த இடை நட்பாளர் ஒருகால் இவ் அரிய பெரிய தத்துவத்தோடு நின்று மயங்கிச் சிறிது முனைப்புக்கொண்டு, மேல்படியேற்றம்பெற்று வீடு பேறடைய முயலாது அமையவும் கூடுமாதலால், அவ்வாறு முனைப்புக்கொண்டு அமைதல் உளதாகும் போது அவர்க்கும் சாதல் ஏற்படும் என்று கூறுதல் வேண்டும். பின்வரும் திருவாக்குக்களும் இவ்வுண்மையை நன்கு புலப்படுத்தும்.

திருவாசகம்

எண்ணிலியிந்திரரெத்தனையோ
[பிரமர்களும்
மண்மிசை மால்பலர் மாண்டனர்காண்
[தோணோக்கம்.
(ஷை திருத்தோணோக்கம். 9)

அப்பர் தேவாரம்

நூறுகோடி பிரமர்களுங்கினர்
ஆறுகோடி நாராயணரங்ஙனே
ஏறுகங்கைமணலெண்ணிலிந்திரர்
ஈறிலாத நல்லீசனொருவனே.
(ஷை ஆதிபுராணத்திருக்குறுந்தொகை 3)

இது பற்றியே இன்னவர் உடலுயிர்க்கு உளதாய சம்பந்தம் இடை நட்பு எனப்பட்டது. இத்தன்மையினர் அகில சீவர்க்கும் மேலான சித்தராய் வதியும் தத்துவத்தான் மயங்கிச் சாதலடையாது அறத்தாறு ஒழுகிப்படியேற்றம் பெறவேண்டும் என்பதனையே பின்வரும் செய்யுட்களால் தேவர் வற்புறுத்தியருளினர்.

குறள்

நாச்செற்று விக்குண்மேல் வாராமு னல்
[வினை
மேற்சென்று செய்யப்படும்.

(இ-ள்) நாச்செற்று விக்குள்மேல் வாராமுன்—மூலாக்கினி மேலெழுந்து அப்புக்கூற்றுக்கு அடக்கமாகி ஐ என்னும் சிலேத்துமம் மேலிடுதலால் நாவை அசைய ஒட்டாது அடக்கி விக்கல் மேல் எழுவதற்கு முன்னமே, நல்வினை மேல்சென்று செய்யப்படும்—படியேற்றம் பெற்று உய்தியடைதற்கேற்ற நற்றவம் விரைந்து செய்யப்படவேண்டும் என்பது.

ஞானசம்பந்தப்பெருமானும் திருவையாற்றுப் பதிகத்தில் "புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி அறிவழிந்திட்டு ஐ மேலுந்தி, அலமந்தபோதின் கண்" என மரணவேதனையின் இலக்கணத்தை அருளிப்போந்தனர். நல்வினை மேற்சென்று செய்யப்படுவதாவது:-உடலும் உயிரும் பகைமையுற்று ஒன்றனைவிட்டு மற்றொன்று பிரிந்து போகாமல் அசுத்த நிறையை அணு அணுவாகச் சேதித்து, அவ் உடலுயிர்கள் கூடிக் குழைந்து அமலமடைந்து ஒழிவற ஒன்றி அள்ளூறுக்கையாய்ச் சூக்குமமாய் நித்தியத்துவம் அடையுமாறுஏற்றசாதகங்களைக்கைக்கொண்டு ஒழுகுதலாகும். (தொடரும்)

உ
திருவருள் துணை




காலமுண் டாகவே காதல்செய்
துய்மின் கருதரிய
ஞாலமுண் டானொடு நான்முகன்
வானவர் நண்ணரிய
ஆலமுண் டானெங்கள் பாண்டிப்
பிரான்றன் அடியவர்க்கு
மூலபண் டாரம் வழங்குகின்
றான்வந்து முந்துமினே.
(திருவாசகம்.)

# வித்தகம்

புதுவை,
பவ-ஹூ சித்திரை-மீ 7உ

## இடம்பட வீடெடேல்

இம் மறை மொழியாகிய மந்திரம் தத்துவப் பெரியாராகிய ஔவைப் பிராட்டியார் அருளியது. இம் மந்திரங்கள் வெளித் தோற்றத்தால் (தூலப் பொருள்) உலக நிலைக்கு உரியன போலவும் உண்மையில் அரிய பெரிய வேத ரகசியங்களையே தம் மகத்துக் சொண்டனவாயும் மிளிர்கின்றன. இவற்றைப் பாலர் முதல் விருத்தர்வரை யாவரும் படித்து அரிய பெரிய பிரமாணமாகக் கைக்கொண்டு வழங்குவது ஆபால கோபால பிரசித்தம். பிராட்டியார் சிவன் முத்தி நிலை கைவரப் பெற்று உண்மை முத்தியடைந்த தத்துவப் பெரியார் என்பதும் யாவரும் அறிந்ததே. ஓ வடிவினராகிய யானைமுகக் கடவுள் கிழவியைத் தமது துதிக்கையால் தூக்கிக் கயிலைக்கண் உய்த்தனர் என்னும் கற்பனை, அவர் இடம் படாதவாறு வீடு எடுத்து—ஓ வடிவம் பெற்று அருள் வீடடைந்த உண்மையையே—ஓ வடிவோடு மறைந்த உண்மையையே நன்கு புலப்படுத்துகின்றதல்லவா? சுந்தரர் யானை மீது இவர்ந்து கயிலை சென்றனர் என்பதன் உண்மையும் இதுவே என்பது சொல்லாமலே அமையும்.

### சுந்தரர்

தானெனைமுன்படைத்தானதறிந்துதன்
பொன்னடிக்கே
நானெனபாடலந்தோநாயினேனைப்
பொருட்படுத்து
வானெனைவந்தெதிர்கொள்ள மத்தயானை
யருள்புரிந்து
ஊனுயிர்வேறுசெய்தானொடித்தான்மலை
யுத்தமனே.
(ஷை திருநொடித்தான் மலை. 1.)

ஊன் அமல மடைந்து அருளாகும். உயிர் சிவமாகும்—சிவாங்கமாகும் என்பது வேத உண்மை.

### திருவாசகம்

ஊச லாட்டுமிவ் வுடலுயி ராயின இருவினை
யறுத்தென்னை
ஓசை யாலுணர் வார்க்குணர் வரியவ
னுணர்வுதந் தொளியாக்கிப்
பாச மானவை பற்றறுத் துயர்ந்ததன்
பரம்பெருங் கருணையால்
ஆசை தீர்த்தடி யாரடிக்கூட்டிய அற்புத
மறியேனே.
(ஷை அற்புதப்பத்து 8.)

### சுத்த சாதகம்

மருள்வடிவதற்குமஃதைநானென்றே
மன்னுஞ்சீவனுக்குமாதரவாய்
மருன்வடிவமுதம்புசித்திடுமதுவே
வயங்கிடுமற்றதையொருவி
அருள்வடிவமுதமூறிடவருந்தி
யஃதுமச்சீவனுங்கரைந்தே
அருள்வடிவதுவுஞ்சிவாங்கிசனும்மா
யமர்ந்து நின்றிடுகின்றபடியே. 59.

என்பது பெரிய நாயகி அருளால் எழுந்த வேத உண்மை.

ஔவையார் திருவாக்குக்கள்என்று வாய்மையில் வழங்குவன எல்லாம் அநுபவத் திருவாக்குக்களே யாகும்—அருள் வாக்குக்களே யாகும். அவற்றுள் "இடம்பட வீடெடேல்" என்னும் மந்திரத்தின் உண்மைப்பொருள் ஈண்டு ஒரு சிறிது விளக்கிக் கூறப்படுகின்றது.

இடம் அழிந்து விடும்படி வீட்டை ஆக்கிக்கொள்ளாதே—ஆக்கிக்கொள்ள முயலாதே என்பது இதன் பொருளாகும். இடம் அழிந்தால் வீடும் அழிந்தது. இடம் நிலைத்தால் வீடும் நிலைத்தது—கைகூடியது—அழியாது. வீடு ஆக்கும்போதே அழியாப் பொருள் கொண்டு ஆக்கிக் கொள்ளல் வேண்டும், —கட்டிக்கொள்ளல் வேண்டும். அவ்வாறு ஆக்கிக்கொண்டால் வீடு அழியாது நிலைக்கும்—நித்தியத்துவம் உண்டாகும். இடமாகிய இல், இல்லாகிய வீடு, வீடாகிய கூடு, கூடாகிய தேகம் நமது சரீரமே. இடமே வீடு. இடம் என்றால் பொருள் யாங்ஙன்? என்பது கடா. இடமே பொருள் என்பது உத்தரம். அஃது எங்ஙனம் ? இடம் இயங்குகின்றதல்லவா? அவ் இயக்கம்—அசைவு—ஒலி இடமே யன்றி வேறோ? இடமில்லாமல் பொருள் உண்டோ?இல்லை. பொருள் இல்லாமல் இடமுண்டோ? இல்லை. ஆதலால் இடமே பொருள். இவை பிரியாமல் பிரிந்து காட்டுகின்றன. விவகரிப்பதனால் இரண்டாகப் பேசப்படுகின்றன. இவ் உண்மை,

### ஔவை குறள்

உடம்பினா லன்றி யுணர்வுதா னில்லை
யுடம்பினா லுன்னியதே யாம்.
(ஷை உடம்பின் பயன், 5)

என்னும் பிரமாணத்தாலும் நன்கு வற்புறுத்தப் படுகின்றது. "திருமந். 3ம். தந். சரீர சித்தி உபாயம் 1, 2; 7ம் தந். கூடாவொழுக்கம் 12, 13;

ஷி அவத்தை பேதம்—கேவல வத்தை 7." என்பனவும் இவ் வுண்மையை நன்கு வற்புறுத்துகின்றன. பிரியாமல் பிரிந்து காட்டும் அமல ஐகார ஒலி சத்தியும் சிவமும் இடமும் பொருளுமாய் நிற்கின்றன. சத்தியே சிவம். சிவமே சத்தி. அமல ஐ இலங்கும் இடத்தை—இலங்கு ஐ யை தன்னுடைய பாகமாகப் பெற்றனள்—இடமாகப் பெற்றனள்—குயின் மொழியம்மை (கோகிலாம்பிகை) என்னும் சிறு பெண்ணுள்—சத்தி—ஞான சத்தி. இதனைத்தான் இடப்பாகம் பெற்றனள்—வாமபாகம் பெற்றனள் எனக்கூறுவது. சிவம் வேறு விஷ்ணு வேறு அல்ல என்னும் சமரச பாகம் இதுவே,

## அப்பர்

"......................
அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாற
னார்க்கே."

## திருவாய் மொழி

"......................
தாமோதரனுருவாகியசிவற்கும்திசை
முகற்கும்"

எனவும் வரும் திருவாக்குக்களும் இவ் அரிய பெரிய சமரச நிலையையே உணர்த்துகின்றனவல்லவா? இருவினையும் ஒப்பிய இடம்—மலபரிபாக மான இடம்—சாதல் அழிவு பெறும் இடம் இதுவே என்க. ஐ இலங்கும் இடத்தை—இலங்குகின்ற ஐ யை தன்னுடைய பாகமாகப் பெற்றனள் —இடமே தானயினள் குயின் மொழியாள் என்பது. இடமே வீடு அல்லவா? இடம் நிலைத்த தானல்—இடம் சத்திபாகம் ஆனல்—இடம் சத்தி யானல் அவ் இடம் படுமோ? பட ஆமோ? புரிசடையோன் புறப்பட்டுப்போவானே? பின் வரும் திருவாக்குக்களும் ஈண்டு நோக்கற்பாலன:

## திருமந்திரம்

புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கி
உறுப்புச் சிவக்கு முரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.

கூட மெடுத்துக் குடிபுக்க மங்கைய
ரோடுவர் மீளுவர் பன்னிரண் டங்குல
நீடுவ ரெண்விரற் கண்டிப்பர் கால்விரற்
கூடிக்கொ ளிற்கோல வஞ்செழுத் தாமே.
(ஷை. 3ம் தந். பிராணயாமம் 12, 13.)

இவ் அஞ்செழுத்தே அமல ஐ—இலங்கு ஐ—இலங்குகின்ற சேவடி—புகலிடம். பஞ்சாக்கர தேகமே ஞான சத்தி வடிவம்—அழியாத விமல யாக்கை—விமல வீடு.

## அப்பர்

என்னிலாருமெனக்கினியாரில்லை
என்னி லுமினியானொருவனுளன்
என்னுளேயுயிர்ப்பாய்ப்புறம்போந்துபுக்
கென்னுளேநிற்குமின்னம்பரீசனே.
(திரு இன்னம்பர்-திருக்குறுந்தொகை. 1)

என்னும் திருவாக்கும் "புறப்பட்டுப் போகான் புரிசடையோனே" என்னும் திருவாக்கின் பொருளை நன்கு புலப்படுத்துகின்றதன்றோ! பின் வரும் சிவவாக்கியர் திருவாக்கும் இவ் வுண்மையை நன்கு புலப்படுத்துதல் கண்டுகொள்க.

## சிவவாக்கியர்

உருத்தரித்த நாடியி லொடுங்குகின்ற வாயுவைக்
கருத்தினா லிருத்தியே கபாலமேற்ற வல்லிரேல்
விருத்தரும் பாலராவர் மேனியுஞ் சிவக்குமே
அருட்டரித்த நாதர் பாதம் அம்மை பாதம் உண்மையே.

இடம் பட்டால்—அஸ்தமித்தால்-அழிந்தால் சத்தியழிந்தது. அதனல் சிவமும் அழிந்தது. புரிசடையோன் புறப்பட்டுப்போய்விடுவன். சேதனம் பின்னமடையும். ஞானம் கைகூடாது. முத்தி நெறி கைகூடாது. பிறவி நெறியே உளதாகும்.

## சுத்த சாதகம்

மேலொருவடிவையெடுத்ததேயாகின்
மேவுமிவ்வுடலிங்கேவீழும்
மேலொருவடிவையெடுத்ததின்றாகின்
மேவுமிவ்வுடலிங்கேவீழா
மேலொருசிவத்தைச்சீவன்சென்றடையு
மேவுமிவ்வுடலிங்குத்தானே
மேலொருசிவத்தின்வடிவதாமருளாய்
வெளியதாமுலகுகண்டிடவே. (19)

## திருமந்திரம்

உடம்பா ரழியி லுயிரா ரழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டா
ருடம்பை வளர்க்கு முபாய மறிந்தே
யுடம்பை வளர்த்தே னுயிர்வளர்த் தேனே.
(ஷை. 3ம். தந். சரீர சித்தி உபாயம். 1)

என்பதன் உண்மைப் பொருளும் இதனல் புலப்படுகின்றதல்லவா? இடமாகிய இல் அழிவதுதான் அவரோகண ஈறு—கீழ்முக விளைவாலாய பயன்—அவச்சலனத்தாலாய பயன் —அசுத்த அசைவாலாய பயன்—அசுத்த நிறையின் ஆதிக்கத்தாலாய பயன்—முன்னிலைகளை நிறை கண்டு பஞ்சீகாணித்துச்சரீரமாகிய பகையை நட்பாக்கிக்கொள்ளாமையாலாய பயன் —ஆலத்தை அமுதமாக்காமையாலாயபயன்—மூலாக்கினி மேலெழுந்து அப்புக்கூறுக்கு அடக்கமாகி ஐ என்னும் சிலேத்துமம் மேலிடுதலாகிய ஜன்னி என்னும் யமவேதனைப் பட்டு மாண்டு போதலாகும் என்க. ஆதலால் இடம் படுதல் கூடாது —இடம்பட—இடம்படுமாறு வீடு எடுத்தல்—ஆக்கல் கூடாது —ஆக்க முயலல் கூடாது. இடம் படுதற்குக் காரணமான முயற்சிகள் —வினைகள் அவமாகும்— அவ வினையாகும். புது வினையாகிய மதி வினையால் பழ வினையாகிய விதி வினையை வென்று இடம்படாதவாறு —கெடாதவாறு வீட்டை எடுத்தல் வேண்டும்—ஆக்கல் வேண்டும்—செய்தல் வேண்டும். வியாப்பியத்தினின்று நிறை பிரிந்து—அசைவு பேதத்தால் —அசைவு பேதத்தாலாய நிறை பேதத்தால் பிரிந்து—பிரிந்ததனல் பங்கமடைந்த—வியாபகம் பெற்ற அசுத்த பௌதிகக் கூட்டுறவாலாய— "பூதமைந்தும் விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்" (கம்பர்) ஆகிய அகலிடத்து நின்று அவச்ச

லன மடைந்து மாண்டு போகாமல், பௌதிகங்களை நிறை கண்டு பஞ்சீகரணித்து—ஐயம் இட்டு உண்டு—ஐயம் விட்டு உண்டு—இருவினை சமப்பட்ட இடமாகிய—இலங்குகின்ற சேவடியாகிய இலங்கையை—புகலிடத்தை அடைந்து—சாதலைத் தரும் ஐ நீங்கி—அசுத்த ஐ நீங்கி உய்தியடைதல் வேண்டும்—வீடு பெற வேண்டும்—வீடு பெற நிற்க வேண்டும்—முயலல் வேண்டும் என்க. அமல ஐ இலங்கும் இடமாகிய புகலிடமே பொன்னான பூங்கழல்கள்—ரக்ஷக தேகம்—இடப தேகம்—சிவானந்தத் தேன் ஊறும் அமுத யாக்கை—பஞ்சாக்கர தேகம்—"உரு வளர் காமன்றன் வென்றிக் கொடி போன்று ஒளிர்கின்ற" விமல வல்லி வடிவம்—ஞான சத்தி வடிவம் என்க.

இவ்வுண்மைகளை அறிந்து புகலிடம் அடையாது—அடைய முயலாது அகலிடத்தே நின்று—சாதலைத்தரும் ஐ நீங்கப்பெறாத, அஞ்ஞான இருள் நீங்கப் பெறாத மருளுடம்போடு நின்று நீலிக் கண்ணீர் வடித்து அப்பனே! அரசே! அம்மையே! எனக் கூவிக் குழறுவதால் அருளைப் பெறுவது எப்படி? வீடாக்குவது எப்படி?

## திருவாசகம்

புரள்வார் தொழுவார் புகழ்வாரா யின்றே
வந்தா ளாகாதீர்
மருள்வீர் பின்னை மதிப்பாரார் மதியுட்
கலங்கி மயங்குவீர்
தெருள்வீராகி லிதுசெய்ம்மின்சிவலோகக்
கோன்திருப்புயங்கன்
அருளார் பெறுவா ரகலிடத்தே அந்தோ!
அந்தோ! அந்தோவே!

(ஷை யாத்திரைப் பத்து. 10.)

என மணிவாசகர் அருளியதும் ஈண்டு நோக்கற்பாலதே.

புகலிடமாகிய இலங்குகின்ற சேவடியே—இலங்கையே கன்றும் ஆவும் இருக்கும் ஊர். இவ்வூரில்தான் நடு தறி உண்டு. கன்றும் ஆவும் பூத்த ஊர் இதுவே. பூ எனும் பரிசுத்தம் பெற்ற ஊர்—பூ மணம் கமழும் பொற்பூபதி—பூம்புகலூர் இதுவே என்க. நடுதறியினின்றும் அகலாக் கன்றும் ஆவும் சேர்ந்த இடம் என்க. அமல ஐ தழைத்த இடம் என்க. சிவ பூமி என்க. கன்றாப்பூர் என்பது இதன் திரு நாமம். "கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே" என்றார் நமது அப்பர். பின் வரும் திருமூலர் திருவாக்கும் ஈண்டு நோக்கற்பாலது.

## திருமந்திரம்

ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோ
னான்கன்றாய்நாடியழைத்தேனென்னாதனை
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்
பொரு
ளூன்கன்றா னாடிவந் துட்புகுந் தானே.

(ஷை. 8. தந். 31 வது. பக்தியுடைமை 5.)

தசரதன் புத்திரன் தசக்கிரீவனைச் சம்மாரஞ் செய்து சீதையைப் பெற்று அபிராமனாய்—ராமனாய்நின்ற இடமும் இவ் இலங்கையே. சண்முகன் சூரனைச் சம்மாரஞ் செய்த இடமும் இதுவே. சூரன் மயில் வாகனமாக மாறிய இடமும் இதுவே.

## சிறு பாணாறு

" ..................................
நறு வீ நாகமு மகிலுமாரமு
துறையாடு மகளிர்க்குத் தோள்புணையாகிய
பொருபுனல் தரூஉம் இலங்கை"

"கருவொடு போக்கரு மரபின் இலங்கை"

"தொன் மா இலங்கைப் பெயரிய நன்மா
இலங்கை"

இதுவே என்க. இது அன்றோ புகலிடம்! அழியா வீடு ஆக்கமுற்ற இடம் இதுவே!

## திருக்கோவையார்

அகலிடந்தாவியவானோ னறிந்திறைஞ்
சம்பலத்தி
னிகலிடந்தாவிடையீசற் றொழுநின்னற்
கிடமா
யுகலிடந்தான்சென்றெனதுயிர்நையாவகை
யொதுங்கப்
புகலிடந்தா பொழில்வாயெழில்வாய்தரு
பூங்கொடியே

(ஷை நாணிக்கண்புதைத்தல் 42.)

என்றருளியது மாணிக்கம்.

## அப்பர்

முருகார்நறுமலரிண்டைதழுவிவண்டே
முரலும்
பெருகாரடைசடைக்கற்றையினாய்பிணி
மேய்ந்திருந்த
இருகாற்குரம்பையிதுநானுடையவிது
பிரிந்தால்
தருவாயெனக்குன் திருவடிக்கீழோர்தலை
மறைவே.

(ஷை தனித்—திருவிருத்தம் 2)

இடுகுறியாய்—கற்பனையாய் உலகில் வழங்கும் சிவஸ்தலங்களின் திருநாமங்களெல்லாம் இப்புகலிடத்தையே குறிப்பனவாகும். ஏன்? சீவர்களால் அடையப்படும் முத்திவாயில் இதுவேயாதலின் என்க. இவ்விடத்தை அடைந்தவரே அழியாத விமல யாக்கையைப் பெற்றவர்—இடம் பட்டுப் போகாது நிலைக்குமாறு அவ் இடமாகிய வீட்டைக் கட்டியவர்—துவிசத்துவம் அடைந்தவர்—த்வஜம் கட்டி வாழ்பவர்—மாறிப் பிறந்தவர் ஆரூர்ப் பிறந்தவர்—அமல முதற்படி கண்டவர்—பொன்னம்பலம் கண்டவர்—பிறப்புப் பிணி மூப்பு இறப்பு அற்றவர் என்க.

## திருவாசகம்

பிறவிதனை யறமாற்றிப் பிணிமூப்பென்
றிவையிரண்டும்
உறவினொடு மொழியச்சென் றுலகுடைய
வொருமுதலைச்
செறிபொழில்சூழ் தில்லைநகர்த் திருச்சிற்
றம்பலமன்னி
மறையவரும் வானவரும் வணங்கிடநான்
கண்டேனே.

(ஷை கண்டபத்து. 6.)

இவ்விடத்தை அடைந்தாலன்றி—இடம் படாத வாறு வீடு எடுத்தா

லன்றி வேறு வகையால்—இடம்படுதலால்—அழிதலால்—அழிந்த பின்பு வீடடைவதென்பது முயற்கொம்பே—வெற்றுரையே—பித்தன் கூற்றே—அசம்பாவிதமே—அறிவிலார் மாண்பேயாகும். இவ்விடத்தை அடைந்த வழியடியார் அருமை பெருமையை—முத்தி வாயிலில் நிற்போர் அருமை பெருமையை யாரால் இயம்ப முடியும்? இப்புகலிடத்தை ஒருவன் அடையப் பெற்றால்—இடம்படாதவாறு வீடு கட்டப்பட்டால், அதனால் ஆம் பயன் என்னை? எனின், அது பின்வரும் திருவாக்குக்களால் நன்கு புலப்படும்:

## அப்பர்

கன்னெடுங்காலம்வெதும்பிக்கருங்கடனீர் சுருங்கிப்
பன்னெடுங்காலமழைதான்மறக்கினும் பஞ்சமுண்டென்
றென்னெஞ்சுளறுமஞ்சநெஞ்சேயிமை யாத முக்கட்
பொன்னெடுங்குன்றமொன்றுண்டு கண்டீர்ப்புகலிடத்தே.

(ஷ தனித்—திருவிருத்தம் 10.)

[திருமந்திரம், 4ம் தந்திரம். 4. 8. 9. 13. 17, 20, 22, 23, 24, 25, 27-ம் செய்யுட்களை நோக்குக.]

## திருக்கோவையார்

என்னறிவால்வந்ததன்றிதுமுன்னுமின்னு முயன்றுன்
மன்னெறிதந்திருந்தன்றுதெய்வம்வருந்த னெஞ்சே
மின்னெறிசெஞ்சடைக்கூத்தப்பிரான் வியன்றில்லைமுந்நீர்
பொன்னெறிவார்துறைவாய்ச்சென்று மின்றோய்பொழிலிடத்தே.(49)

இப் புகலிடத்தை அடைந்து வாசியை வசப்படுத்தி—வாசிப் பரி மேற்கொண்டு கயிலையை அடைந்த—இடம்படாது வீடு எடுத்த வீடு கண்ட—தூலத்தோடு மறைந்து உண்மை முத்தியடைந்த சேரமான் பெருமாள் நாயனார் அருளிய அநுபவத் திருவாக்கும் ஈண்டு நோக்கற்பாலது.

## பொன்வண்ணத் தந்தாதி

பொன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ண மேனிபொலிந்திலங்கும்
மின்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணம்வீழ் சடை வெள்ளிக்குன்றம்
தன்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமால் விடைதன்னைக்கண்ட
என்வண்ணமெவ்வண்ணமவ்வண்ணமாகிய ஈசனுக்கே.

சற்குருநாதன் அருளால் சாதக யோகங்களை வழுவறத்தாங்கி ஒழுகி—முன்னிலைகளை நிறைகண்டு பஞ்சீகரணித்து—ஐயம் இட்டு உண்டு உலகர் போல் வாழ்ந்து ஒப்புர வொழுகும் அரிய பெரிய சகச நிட்டையாளராகிய—ஞான நிட்டையுடையோராகிய மெய்யடியாரே இடம்படாதவாறு வீடு எடுத்து உய்தி அடைபவராவர். இத்தகைய பக்குவம் அமையும் புண்ணியம் பெறாது, காடுகளிலும் மலைகளிலும் ஆற்றங்கரைகளிலும் பிற இடங்களிலும் வீற்றிருந்து உடம்பை வாட்டி வருத்தி இடம்பட வீடெடுக்கும் சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளரும்—உபாசக நிட்டையாளரும், அசட்டு யோகிகளும் எம்பெருமான் திருவடியை—இலங்குகின்ற சேவடியை—"உற்ற ஆக்கையின் உறு பொருள்" ஆகிய கந்தழியை அடைய முடியுமா? இன்னோர் புகலிடம் புக்கு வீடு ஆக்கினர்—வீடு கண்டனர் என்பது வெறும் வார்த்தையே! திருவாசகம் திருவண்டப்பகுதி அகவலின் உண்மைப்பொருளை உணரவல்லார்க்கு இன்னோர் இடம்பட வீடெடுத்து மாண்டு போதல் நன்கு புலப்படும். இன்ன நீராரை நோக்கியே பின்வரும் திருவாக்குக்கள் எழுந்தன:

## திருவாய் மொழி

வீடாக்கும் பெற்றி யறியாது மெய் வருத்திக்
கூடாக்கி நின்றுண்டு கொண்டுழல்வீர்—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான் வேத முதற்பொருள்தான் விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாரா யணன்.

(ஷ திருமழிசைஆழ்வார்- திருவந்தாதி. 13)

## கந்தரலங்காரம்

திருத்தி யெனும்படி கும்பித்து வாயுவைச் சுற்றிமுறித்
தருத்தி யுடம்பை யொறுக்கிலென் னாஞ் சிவயோகமெனுங்
குருத்தை யறிந்து முகமா றுடைக்குரு நாதன்சொன்ன
கருத்தை மனத்தி லிருத்துங்கண்டீர் முத்தி கை கண்டதே. 71.

காட்டிற் குறத்தி பிரான்பதத் தேகருத் தைப்புகட்டின்
வீட்டிற் புகுத மிகவெளி தேவிழி நாசி வைத்து
மூட்டிக் கபாலமூ லாதார நேரண்ட மூச்சையுள்ளே
ஓட்டிப் பிடித்தெங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே. 85.

## திருப்புகழ்

"காவி உடுத்தும் தாழ்சடை வைத்துங் காடுகள் புக்குந் தடுமாறிக்
காய்கனி துய்த்துங் காயமொ றுத்துங் காசினிமுற்றுந் திரியாதே
......................."

"அனித்தமான ஊனாளு மிருப்பதாகவே நாசி
அடைத்துவாயுவோடாதவகைசாதித்து
தவத்திலேகுவாமூலிபுசித்துவாடுமாயாச
அசட்டு யோகியாகாமல் ............"

[இவற்றால் சவிகற்ப நிர்விகற்ப நிட்டையாளர்—உபாசக நிட்டையாளர்—அசட்டுயோகிகள் புகலிடம்—புக்கு இடம் படாது வீடெடுத்து உய்தியடைவது முற்றாக முடியாத காரியம் என்பது நன்கு வலியுறுத்தப்பட்டது. அநித்தமான ஊன்—சாதலைத் தரும் ஐயாகிய அசுத்த நிறை யமைந்த மருளுடம்பு.]

புகலிடம் அடைந்து—கன்றாப்பூர் அடைந்து இப்பயனை அஃதாவது பொன்னெடுங்குன்றம் என்னும் பொருளை—உலவாக்கிழி, எனவளரும் பொருளை—மெய்ப்பொருளை—இடத்தில் உள்ள பொருளை—இடமாகிய பொருளை அடைந்தாலன்றி ஒருவன் படியேற்றம் பெறவும் அறம் பொரு

# உயிர் வருக்கம்

( 20-ம் வாரத்தொடர்ச்சி )

இவ் அரிய பெரிய வேத உண்மையையே அறிஞர் பெருந்தகையாகிய ஸ்ரீ மாங். ஜகதீஸ சந்தர வஸு (J.C. Bose.) என்பவர் கருவிகள் மூலம் வெகு ஜன சமூகத்தில் பிரத்தியட்சமாகக் காண்பித்துவிட்டனர். உயிர் வர்க்கங்களில் மனிதவர்க்கம்உயர்ந்தது எனவும், அதனினும் தாழ்ந்தன மிருகம் பறவை முதலியன எனவும், அவற்றினும் தாழ்ந்தன தாவரங்கள் எனவும் பன்னெடுங்காலம் தொட்டுப் பரம்பரையாய் குருட்டுத்தனமாய் நம்பிவந்த கொள்கைகள் வேரறுக்கப்பட்டு அக்கொள்கைகட்டுச் சாவுமணி அடிக்கப்பட்டுவிட்டது. யாது காரணம் பற்றியோ பல்லோராலும் மறைத்து வைக்கப்பட்டு புறக்கணிக்கப்பட்ட வேத உண்மை வெள்ளிடைமலைபோல் விளக்கப் பட்டுவிட்டது. உற்பத்தி, வளர்ச்சி, அழிவு என்பனவற்றில் தாவர சங்கமங்களுள் யாது பேதமும் இல்லை என்று புண்ணிய புருடராகிய போஸ் என்பவரால் பிரத்தியட்சமாகக் காட்டி உறுதிப்படுத்தப்பட்டுவிட்டது. இவ்வுண்மை பத்திரிகைகள் பலவற்றில் வெளிவந்த அன்னவர் விரிவுரைகளால் நன்கு புலப்படும். ஈண்டு விரிப்பிற் பெருகும்.

பிறப்பு வளர்ச்சி இறப்பு என்பனவற்றில் உயிர் வருக்கமெல்லாம் ஒரு நிகரனவாயினும் மனிதவர்க்கம் மட்டும் இறந்துவிட்டால் — செத்துப் போனால் முத்தியடைந்துவிடும் என்றால், இஃது இயற்கை நெறியும் சத்திய நெறியும் ஆகுமா?

“செத்தே பேறற் சிரியாரோ?“

என்றனரே மணிவாசகர் தாம் அருளிய திருவாசகத்தில்.

ஆறறிவு பூரணம் பெற்ற சீவரே மனிதர். இவரே வாய்மையான மக்கள். “மக்கள் தாமே ஆறறிவுயிரே’, என்றனர் தொல்காப்பியர். ஒவ்வொரு சீவனும் மனிதனுவதற்கு முயற்சித்து அரும் பாடு பட்டு மனிதனான பின்புதான் முத்திவாயிலை அபேக்ஷிக்கவேண்டும் — அபேக்ஷிக்க முடியும். —அபேக்ஷிக்க அருகனுவன். இத்தன்மை கைவரப் பெறுவது எளிதின் முடிவதன்று. அரிது! அரிது! மா அரிது. ஆதலால் உலகில் மனிதர் எனப்படுவோர் வாய்மையான மனிதரல்லர் —போலி மனிதரே—இருகாற் பசுக்களே என்க. இருக்கு வேதமும் முறையிடுவது இதுவே. சாதிகளும் பிறவும் இன்ன தன்மையனவே. இப் போலி இல்லாவிடின் வாய்மை ஒன்று உளது என்னும் எண்ணமே உண்டாகாது. ஆதலால் போலியைக் கொண்டே வாய்மையை அறியவேண்டும், “ஸர்வம் ப்ரஹ்ம மயம்” என்னும் வாக்கியத்திற்கு ஏற்ப, இக்கற்பனைகள் அனைத்தும், அஃதாவது தேகாதிப் பிரபஞ்சங்களனைத்தும் கற்பனைகள் எனப்படுதலால், அக்கற்பனைகள் என்னும் பிரமத்தைஉண்டவனன்றோ —நிறைகண்டு பஞ்சீகரணித்தவனன்றோ ப்ரஹ்ம பாவன்! அக்காலத்தன்றோ “தத் தொம் அசி” “அது நீ ஆனுய்” என்னும் மகா வாக்கிய அநுபவம் சித்திக்கப் பெறும்! அற்றேல் வேறு தடம் யாண்டுளது?

சிலர் தோல்காப்பியம் என்னும் நூலில் “மரபியல்” எனனும் அத்தியாயத்தில் கூறப்பட்ட

“ஒன்றறிவதுவே உற்றறிவதுவே
இரண்டறிவதுவே அதனெடு நாவே
மூன்றறிவதுவே அவற்றெடு மூக்கே
நான்கறிவதுவே அவற்றெடு கண்ணே
ஐந்தறிவதுவே அவற்றெடு செவியே
ஆறறிவதுவே அவற்றெடு மனனே
நேரிதினுணர்ந்தோர் நெறிப்படுத்தினரே.”

இச் சூத்திரங்களை உதாரணமாகக் காட்டி தாபரங்களுக்கு ஓரறிவு மட்டுமே உண்டு எனவும் ஏனையவற்றிற்கு ஆறறிவு வரை ஒவ்வோர் அறிவு மட்டுமே ஏற்றமாக உள்ளன எனவும் உலகில் மனிதர் எனப்படுவோரே ஆறறிவுடையோர் எனவும் கூறி அமைவர்.

இவர் கூற்றை மேலே கூறிய தொல்காப்பியச் சூத்திரப் பொருளோடு ஒப்பிட்டுப் பார்ப்பதென்றால், அக்கூற்று வாய்மையாகத் தோன்றவில்லை. ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாக உள்ளன உயிர் வர்க்கங்கள் என்று அவற்றின் இலக்கணத்தைக் கூறவில்லையே எமது தொல்காப்பியம்! மற்றே, ஓரறிவு முதல் ஆறறிவு வரை ஒவ்வோர் அறிவென்பது ஒவ்வோர் இந்திரியத்தினல் வெளிப்படையாகத் தோன்றும் எனவும், இவ் இந்திரியத்துக்கு இவ் அறிவு உரிமையுடையது எனவும் கூறுகின்றது. இதனை “நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத்தினரே.” என்றார் தொல்காப்பியனார். இவ் ஆசிரியர் கூற்றினல் ஜங்கம தாவர சரீரங்கள் அனைத்தும் சமானங்களேயாம் என்பது வெளிப்படை. ஆனல் தற்காலக் குருட்டு மாந்தர் வேறு விதமாக அநர்த்தஞ்செய்து கொள்ளுகின்றனர். மனித சமூகம் எனப்படும் போலி மனிதருள்ளும் ஓரறிவுமுதல் ஒவ்வோர் அறிவு தலைமைபெற்று விளங்கும் தன்மையர் உளர். இது போல மற்றைய சரீரங்களிலும் உள. இது தான் வாய்மை.

இதனல் பெறப்படுவது யாதெனின், உயிர் வர்க்கம் யாவும் பிறப்பு வளர்ச்சி இறப்பு என்பனவற்றில் சம்மானவையே என்பதும், ஆறறிவு பூரணம் பெற்ற உயிர்களே முத்தி வாயிலைக் கண்டு மரணத்தைக் கடந்து நித்தியத்துவம் பெறும்—முத்தியடையும் என்பதுமே என உணர்க.

சுபம்.

---

ளாலய பயனை அடையவும் அருகனுவனே? ஆகான், ஆகான், என்பது சத்தியம்.

இவ் அரிய பெரிய வேதஉண்மையை —தாம் அநுபவமாகக் கண்ட உண்மையை பிறவி வலைப்பட்டுழலும் அகிலமாக்களுக்கு அறிவித்தற் பொருட்டே நமது கிழவி—தாயார் —ஒளவைப் பிராட்டியார்,

“ இடம்பட விடேடேல் ”

என்று அருளிச் செய்தனர் என அறிக. மற்றைய மந்திரங்களும் அமயம் நேர்ந்துழி விளக்கிக் கூறப்படும்.

சுபம்.